கலைமகள் காந்தி அஞ்சலி 1

# அண்ணல் காந்திக்கு அநுதாபக் கீதம்

ஊர்காவற்றுறை

ஜி. எம். செல்வராஜ் அவர்கள்

இயற்றியது

மூன்றும் பதிப்பு

பிரசுரம்:

**கலைமகள் கம்பெனி**

124, செட்டியார் தெரு கொழும்பு.

T'grams: "Kalaimagal," Colombo. P. O. Box 765

 [விலை சதம் 25

# முகவுரை

நமது பாரத பூமியிலே பம்பாய் மாகாணத்தில் கத்திய வார் என்ற சமஸ்தானத்திலுள்ள போர்பந்த என்ற நகரத்தில் 1869-ம் ஆண்டு அக்டோபர் மாதம் 2ந் திகதி, சந்திர காந்தி என்னும் குடும்பத்தில், அறிவுச் சுடருக்கு அஸ்திவாரமாய், அருந்தவப் புதல்வராய் இன்று உலகம் போற்றும் நமது அண்ணல் மகாத்மா காந்தி உதயமானுர்.

இவர் ஏற்ற பருவத்திலேயே வேண்டிய கலைகளையெல்லாம் கற்று வல்லுனரானுர். இந்து தர்மத்தை மீறித் தான் எவ்வித செயலுக்கும் ஈடுபடுவதில்லையென்று தன்னன்னைக்குச் சிறுவயதிலேயே வாக்களித்திருந்தார். அவ்வாக்கை தன் சீவன் பிரியுமட்டும் நிறைவேற்றி வைத்தார்.

இன்னும் ஹிம்சையை வெறுத்து அஹிம்சயைக் கைக்கொள்ள வேண்டுமென்பதும், எல்லா மக்களும் "யாதுமூரே யாவரும் கேளீர்" என்பதற்கிணங்க வாழ வேண்டும் மென்பதும் அவருடைய போதனையாகும்.

இவ்வித பெருங்குணம் படைத்த பெருமான், தமது 79-வது வயதில் நாம் எல்லோரும் ஏங்கித் தவிக்க, மரணத் திரையில் மறையலானுர். இம்மறைவைக்கண்டு உலகமே நடுநடுங்கியது. நமது காந்தியடிகள் கண்ணுக்குக் காணுது மறைந்து போனுலும், அவருடைய பூத உடம்பு அழிந்தாலும், அம்மகானின் புகழுடம்போ ஒருபோதும் அழியாதென்பது உறுதி.

ஜி. எம். செல்வராஜ்

ஊர்காவற்றுறை

15—2—48

## மகாத்மாவின் மனம் கவர்ந்த பாடல்

## நாமாவளிகள்

ரகு பதி ராகவ ராஜராம்
பதித பாவன ஸீதா ராம்

ஈஸ்வர அல்லா ஹ் தேரே நாம்
ஸொப்கோ சம்மதி தே பஃவான்

நாராயண நாராயண ஜய கோவிந்த ஹரே
நாராயண நாராயண ஜய கோபால ஹரே

ஹரே ராம் ஹரே ராம் ஹரே ராம் ஹரே
பஜமன நீசீநதினிதிங் ப்யாரே

ஸ்ரீ கிருஷ்ண கோவிந்தா ஹரே முராரே
ஹே நாத நாராயணு வாஸுதேவ

விபதோ நைவ விபத ஸம்பதோ நைவ ஸம்பத
விபத்விஸ்மரணம் விஷ்ணோ ஸ்ம்பந் நாராயண ஸ்ம்ருதி.

ராகம் கமாஸ் — தாளம் தீஹமானீ

வைஷ்ணவ ஜனதோ தேனே கஹியே ஜோபிட் பராயீ
ஜானேரே!

பாது கேஹ உபகார கரே கோபே மன அப்ஹி மானந்
ஆணேரே!

ஸகல லோகமா ஸஹுனே வந்தே நிந்தா நகரே கேனீசே!
வாச காச் ஹமன நிஸ்சல ராகேஹ த்ஹனத்ஹன ஜனனீ
கேனீரே

ஸம த்ருஷ்டீனே த்ருஷ்ணு த்யாகி பரஸ்த்ரீ ஜேனே மாதரே!
ஜிஹ்வா த்ஹகி அஸத்ய் நபோலே பரத்ஹன நவ ஜ்ஹாலே
ஹாத்ஹரே

மோஹ மாயா வ்யாபே நஹி ஜேனே த்ருட்ஹ வைராக்ய
ஜேனு மனமாரே!

ராமநாமஸு தாலீ லாகீ ஸகல திரத்ஹ தேனு தனமாரோ!
வண லோப்ஹீனே கபட ரஹித சேஹ காமக் கிரோத்ஹ
நிவார்யாரே

## கடவுள் வணக்கம்

மாசற்ற தந்தை மாகாத்மா காந்தியின் மேல்
பாசத்தோடே யின்பப் பாட்டிசைக்க—நேசத்தே
நெஞ்சிருத்தித் தாயே நீவந்தென் னாவினிலே
செஞ்சொற்கள் தாராய் செறித்து.

## மகாத்மா காந்தியின் மறைவு

புண்ணிலே தீக்கோல் புகுத்தி யிருந்தாலும்
கண்ணிலே நீர்க்கசியாக் கல்நெஞ்சர்—மண்ணினிலே
ஓங்குபுகழ் காந்தி உயிர்நீத்தல் கேட்டாக்கால்
ஏங்கியழா தாரோ எவர்

## காந்திஜியைத் தோத்தரித்தல்

[பஜனை செய்வோம் என்ற—மெட்டு]

பல்லவி

பஜனை செய்வோம் காந்திநாமம்—இனி பஜனை
பங்கமில்லா துயிர் எங்களுக்கா யின்று
பலிதந்த காந்திமகானை—இனி பஜனை

அநுபல்லவி

பாரினில் பகைமை வேரற நீக்கப்
பகலிர வோடு எந்நாளும்
பகருதற்கரிய துயரினை யடைந்த
பரித்தியாகியைத் தினம் நாமே இனி பஜனை

சரணம்

பரிமள மலர்கள் அவரிருகழலில்
பரிவுடன் சொரிந்து எந்நாளும்
பகல்விளக் கேற்றியே பணிந்து மன்றாடியே
பாபுவை நாம் துதிப்போமே—இனி பஜனை

# எங்கள் தந்தையை இனி எப்போ காண்போம்

[கண்ணாரக் காண எ - மெ]

பல்லவி

கண்ணாரக் காண்பதெப்போ காந்திமகானை
எந்நாளில் காண்பதெப்போ

சரணம்

மன்னாதி மன்னரால்
மதித்திடு மகாராஜன்
இன்றூடு இழந்ததால்
இனி ஏது பிரகாசம் (கண்ணா)

மதிமுகமே கண்டு
மகிழ்ந்து நாம் பேணிட
பதியினில் நாம்படும்
பலதுயர் கூறிட (கண்ணா)

தாமரை யிலைமீது
தங்கிய நீர்போல
தத்தளிப் படுகிறோம்
தாதையின் பிரிவாலே (கண்ணா)

அடைக்கலம் எமக்கேது
அணைப்பவரினி யாரு
நடைப்பிண மானோமே
நரமினிக் காணோமே (கண்ணா)

## பரமாத்மாவுக்கு நடந்த படுகொலை

[பூமியில் மானிடர் என்ற—மெ]

பாரத நாடு பயின்றெடுத்த எங்கள்
பக்திமானைப் பரமாத்மாவை
தாரதல மதிலே பலி செய்ததால்
தயங்குகிறோம் அந்தோ மயங்குகிறோம்

பொன்னுடலாவி பொருள் புகழ் யாவையும்
இன்னிலத்தோருக்கே அர்ப்பணித்த
மன்னன் மகாத்மா காந்தியை மதியீனன்
மாய்த்துவிட்டான் தலை சாய்த்துவிட்டான்

மாலை ஐந்துமணி வேளையில் பிரார்த்தனை
மக்களுக்காகவே வேண்டல் செய்ய
சோலையிருந்து வரும்போது பாதகன்
சுட்டுவிட்டான் தீயில் இட்டுவிட்டான்

தள்ளாத கால வயதென்றும் பாராமல்
தண்டு கோலூன்றியே தொண்டுசெய்தார்
உள்ள துளி ரெத்த மில்லாது ஓடவே
உயிர் துறந்தார் உம்பரிடம் புகுந்தார்

## பாரதத் தாயிடம் மக்கள் முறையிடல்

[ஐயா சிறுபெண் எ—மெ]

பல்லவி

ஐயோ எமது அன்னையான பாரதத் தாயே
அண்ணல் மகானை ஏதுசெய்தாய் பாரதத்தாயே—இது
ஆகுமோ தாயே

சரணம்

வையகத்தை உய்யவைக்க
வந்த கோமானே—உந்தன்
கைவிலங்கை வெட்டிவிட்ட காந்திமகானே
ஐயோவென்று நாடலற அகல வைத்தாயோ
அவராத்துமாவை அமரரோடு புகலவைத்தாயோ
விண்ணில் திகழ வைத்தாயோ—ஐயோ

பாரிலதம் போக்கவந்த பாரத வீரன்—ஒரு
பாதகமும் செய்தறியாப் பார்புகழ் தீரன்
ஊரில் மக்கள் உருகியழ உயிர்பறித்தாயோ—அவர்
வீரியத்தின் உடலைத்தீயில் வேகவைத்தாயோ—எம்மை
நோக வைத்தாயோ—ஐயோ

ஆங்கிலேயராட்சியை யறுத்தெறிந்தவர்—எங்கள்
ஆதிகால அசோக சக்கரம் வாங்கித் தந்தவர்
ஓங்குபுகழ் யாவுமொருங்காக யீந்தவர்—இன்று
ஏங்கி ஏங்கி நாம் தவிக்க எங்கு சென்றவர்
தாயே எங்கு சென்றவர்—ஐயோ

பத்தினியாள்கஸ்தூரிபைப்பார்க்கச்சென்றாரோ—அன்றி
பண்டிதமோதிலால் நேரைத் தேடிச் சென்றாரோ
முக்தியைத்தான் அடையவென்று
முடிவு கொண்டாரே—அதை
முடிவு பண்ணித் திருவிளியை
மூடிக்கொண்டாரோ—வழி
தேடிச் சென்றாரோ—ஐயோ

## மகாத்மாவுக்கு மக்களனுப்பிய தூது

கண்ணிகள் [வெண்புறாவே எ—மெ]

காவிருந்து கூவிவந்த வெண்புறாவே—தாத்தா
காந்தியிடம் தூதுசொல்லு வெண்புறாவே

தந்தையற்ற மைந்தரானேம் வெண்புருவே—என்று
தாத்தாவிடம் சொல்லிவாராய் வெண்புருவே

அன்னையற்ற பிள்ளையானேம் வெண்புருவே—நாங்கள்
அந்தரித்தோ மென்று சொல்லு வெண்புருவே

செய்த பிழை என்னவென்று வெண்புருவே—நீயும்
செப்பமுடன் கேட்டு வாராய் வெண்புருவே

ஆலவாய்க் கரும்புபோலே வெண்புருவே—நாங்கள்
ஆனேமென்று சொல்லிவாராய் வெண்புருவே

எங்களிரு கண்ணிழந்தோம் வெண்புருவே—என்று
ஏங்குகிறேமென்று சொல்லு வெண்புருவே

பொற்கொடியிழந்தோ மென்று வெண்புருவே—நித்தம்
புலம்புகிறேமென்று சொல்லு வெண்புருவே

சுந்தரனைக் காணேமென்று வெண்புருவே—கண்ணீர்
சொட்டுகிறே மென்று சொல்லு வெண்புருவே

சந்தணத்திக் கட்டையிலே வெண்புறவே—சுட்டு
சாம்பல் கொண்டோமென்று சொல்லு வெண்புறவே

ஆண்டவனிடமெமக்காப் வெண்புறவே—நிதம்
வேண்டல் செப்பச் சொல்லிவாரய் வெண்புறவே

## மகாத்மாவின் சேவை

### ஆனந்தக் களிப்பு

மாந்தரிகல் உத்தமர் யாரு—உந்தன்
மார்தட்டி காந்தி மகான் என்று கூறு

சாந்தம் பொறையுற்ற மேரு—சர்வ
சாதியும் கொண்டாடும் கற்பகத் தாரு

சத்தியம் போதித்த ஞானி—அதன்
தத்துவங்கள் கண்ட ஞான விஞ்ஞானி
புத்தியில் வித்தக வாணி—நல்ல
புண்ணியம் பூத்துப் பொலியும் பூங்காணி

உண்ணுவிரதங்கள் கொண்டார்—அதில்
உறுதியாய் நின்று பல வெற்றி கண்டார்
மண்ணாசை மூவையும் வென்றார்—காந்தி
மாமுனிவன் என்னும் பேர்பெற்றுக் கொண்டார்

கையிலே ராட்டை எடுத்தார்—அதைக்
காட்டிச் சுளற்றியே கற்றுக் கொடுத்தார்
மெய்யில் கதராடை கொண்டார்—அதன்
மேன்மை யுரைத்துப்பின் வெற்றியைக் கண்டார்

தொண்டர் படைகள் திரட்டி—வெள்ளைக்
தோலிட்ட ஆங்கிலச் சட்டம் புரட்டி
தண்டிக்கு யாத்ரை போனார்—உப்புக்
தாவி எடுத்ததில் வெற்றியுமானார்

ஆலயம் யாவும் திறக்க—அதில்
ஹரிஜனர் அரிச்சனை பண்ணப்பழக்க
வேலைகள் செய்து திரிந்தார்—அதில்
வெற்றியடைந்ததால் உள்ளங் குளிர்ந்தார்

ஜாதிச் சமயத் துவேஷம்—அது
சரியல்ல வென்று சமத்வ கோஷம்
போதித்தார் பூமியின்மீது—அதைப்
புத்தியுள்ளோர் கற்றுகொண்டாரிப்போது

நவகாளி நகரத்துக் கேகி—அங்கு
நடைபெற்ற கலகத்தை நசுக்கி நீறாக்கி
உவகை பூத்தொருமிக்கச் செய்தார்—அன்பில்
உறுதியாய் நிலைகொள்ள உபதேசம் செய்தார்

வெள்ளி என்னும் பொல்லா வாரம்—தந்தை
வெளிவந்து பிரார்த்தனை செய்திடும் நேரம்
துள்ளியே அஞ்சாது சுட்டான்—தீயின்
கொள்ளியை எங்கள் தலையிலே யிட்டான்

## சுட்டதைச் சொல்லி முறையிடல்

கண்ணிகள் [தேயிலைத் தோட்டம் எ—மெ]

என்ன அநியாயம்—எங்கள்
ஏந்தல் மகாத்மா காந்தியைச் சுட்டது (என்ன)

மன்னர்க்கு மன்னவனை—ஒரு
மாசில்லாத பரதேசியைச் சுட்டது (என்ன)

கண்கண்ட தெய்வமல்லோ—என்றும்
காணக் கிடையாத காந்தியைச் சுட்டது (என்ன)

எந்தெந்த வேளையிலும்—நாங்கள்
ஏற்றிப் பணிந்திடும் ஏந்தலைச் சுட்டது (என்ன)

சூரியன் மங்கினதே—ஒளி
சோபித்திலங்கிய சோமனைச் சுட்டது (என்ன)

திங்களும் மங்கினதே—எங்கள்
தேசத்தலைவனை நாசமாய்ச் சுட்டது (என்ன)

சங்கைகள் மங்கினதே—எம்மைச்
சார்ந்து இலங்கிய சாதுவைச் சுட்டது (என்ன)

பாற்கடலில் கிடைத்த—எங்கள்
பாக்கிய ராசாவைப் பாதகன் சுட்டது (என்ன)

ஆதாரம் போனதுவே—எங்கள்
ஆதித்தனை அஹிம்சையைச் சுட்டது (என்ன)

ஜோதி அணைந்ததுவே—என்றும்
நீதிகள் கோணாத நேசரைச் சுட்டது (என்ன)

பாரத மாமணியை—பொல்லாப்
பாவி அவர்மீது தாவியே சுட்டது (என்ன)

சத்திய நாதனையே—அந்தச்
சண்டாளன் சற்றுமிரங்காது சுட்டது (என்ன)

## மகாத்மாவை ஆண்டவனிடம்மனுபேசகேட்டல்

கண்ணிகள் [அஞ்சுவயதினிலே எ—மெ]

ஆண்டவனுரிடத்தில் அனுதினமே எமக்காய்
வேண்டுதல் புரிந்திடுவாய்—மகாத்மா
காந்தியெனும் சாந்தியே நீ

இந்து முஸ்லீம்களென்றும் இன்பமாய் வாழுதற்கு
சந்ததம் வேண்டிடுவாய்—மகாத்மா
காந்தியெனும் சாந்தியே நீ

ஜாதித் துவேஷம் போக்கிச் சமத்துவ பூமியாக்கி
ஜோதியாய் இலங்கவைப்பாய்—மகாத்மா
காந்தியெனும் சாந்தியே நீ

பஞ்சம் பகைவிலக பாரில் அன்பு நிலவ
செஞ்சுடரைப் போற்றி செய்வாய் மகாத்மா
காந்தியெனும் சாந்தியே நீ

சென்னல் கன்னல் பொலிய பொன்னும் எல்லாம் மலிய
அண்ணலைப் போற்றி செய்வாய்—மகாத்மா
காந்தியெனும் சாந்தியே நீ

பறக்கும் பாரதக் கொடி பாரதனிலே நீடிக்க
பரமனை வேண்டிடுவாய்—மகாத்மா
காந்தியெனும் சாந்தியே நீ

இலங்கும் ஜவஹர்லாலும் என்றும் நீடுழிவாழ
இறைவனை வேண்டிடுவாய்—மகாத்மா
காந்தியெனும் சாந்தியே நீ.

பாரத நாட்டு மக்கள் பக்தியாய் நீடு வாழ
பரமனை வேண்டிடுவாய்—மகாத்மா
காந்தியெனும் சாந்தியே நீ

## மகாத்மாவைப்போல் இனி ஒருவர் தோன்றுதல் அரிது

[அன்னையும் தந்தை எ—மெ]

பல்லவி

காந்தி மகாமுனி போலே—இந்தக்
காசினி மீதிலோர் பூசிதருண்டோ—காந்தி

சரணம்

சாந்தசத் யாக்கிரக யோகி—ஒரு
சத்திய வந்தன சற்குண ரூபி
ஆய்ந்த அறிவில் விவேகி—எம்மை
அடிமையிலே நின்று காத்த தியாகி—காந்தி

ஆசியா தேசத்தின் ஜோதி—வீர
அறப்போர் பொருதிய அருட்பரித்யாகி
பூசித ஞான விஸ்வாசி—இந்தப்
பூவுலகோர் கண்ட புனித சந்யாசி—காந்தி

பாரத பூமியின் மீது—ஒளி
பாவித்திலங்கிய பரிசுத்த சாது
காலன்கை சென்றது ஏது—இனி
காந்திமகான் முகம் காண்பதெப்போது—காந்தி

பண்டித மோதிலால் நேரு—வலப்
பக்கமிருக்கவோ பறந்தாரிப்போது
மண்டலத்தில் மகிழ்வேது—இது
மாமுனி போல் எவர் வருவார் மண்மீது—காந்தி

ஓம் சக்தி